* துஞ்சிய : காரியாற்றுத்துஞ்சிய நெடுங்கிள்ளி, சேரமான் கோட்டம்பலத்துத்துஞ்சிய மாக்கோதை, சேரமான் சிக்கற்பள்ளித்துஞ்சிய செல்வக்கடுங்கோவாழியாதன், சோழன் இலவந்திகைப்பள்ளித்துஞ்சிய நலங்கிள்ளிசேட்சென்னி, சோழன் குராப்பள்ளித்துஞ்சிய கிள்ளிவளவன், சோழன் குராப்பள்ளித்துஞ்சிய பெருந்திருமாவளவன், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், பாண்டியன் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறன், பாண்டியன் கூடகாரத்துத்துஞ்சிய மாறன் வழுதி, பாண்டியன் சித்திரமாடத்துத்துஞ்சிய நன்மாறன், பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி: இவற்றிலுள்ள 'துஞ்சிய' என்னுஞ் சொல்லின் பொருள் 'இறந்த' என்பதே. சிலப்பதிகாரம் மதுரைக்காண்டமுடிவில் 'அரசு கட்டிலிற்றுஞ்சிய பாண்டியன் நெடுஞ்செழியன்' என்று இளங்கோவடிகள் கூறியிருத்தல் காண்க; இன்னும் ஸ்ரீ சுந்தரமூர்த்திநாயனார் திருத்தொண்டத்தொகையில், "கருவூர்த்துஞ்சிய புகழ்ச்சோழர்" என்று எடுத்தோதியதுங் காண்க. அக்காலத்தரசர் புறநாட்டைக் கைப்படுத்தி மாற்றரசரைப் போர்க்களத்தில் முறிய அடித்திருந்ததால் அதனை விளக்கும் தொடர்ச்சொற்களைச் சேர்த்து, 'பாண்டியன் ஆரியப்படைதந்த நெடுஞ்செழியன்' என்றும், 'பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்' என்றும், 'பாண்டியன் கானப்பேர்தந்த உக்கிரப்பெருவழுதி' என்றும் அவர் பெயரைப் பிற்காலத்தார் வழங்கிவந்ததுபோலவே, மேலே கூறப்பட்ட இடங்களில் அவ்வவ்வரசர் இறந்ததனால் அதனையே விசேடணமாக்கி அவர்கள் பெயரைப் பிற்காலத்தார் வழங்கி வந்தார்களென்று தோற்றுகின்றது (ராவ்பகதூர் வி. கனகசபைப் பிள்ளையவர்கள் எழுதியது); இப்படியே, அரசர்கள் இறந்த இடத்தை அவர்கள் பெயருக்கு விசேடணமாக்கிக் கூறுதல், கோழிக்கோட்டு ஸாமூதிரி அரசரின் பரம்பரை வழக்கமென்று தெரிகிறது.

---

*தொண்டைமான்: (தொண்டைமானென்பதற்குப் பொருள் பெரும் பாணாற்றுப்படையுரையிற் காண்க): ஒரு சோழன் சிறப்புப்பெயராகிய ஆதொண்டை யென்னும் பதத்திலிருந்துண்டான காரணப்பெயரென்று சிலர் கூறுவர். சோழர் பல்லவர்களை ஜயித்து அவர்களுடைய நாட்டைக் கைக்கொண்டபின், பல்லவகுலத்தைச் சேர்ந்த மன்னவர்கள் தொண்டைமானென்ற பட்டப்பெயரைப் பெற்றுச் சோழராஜாக்களின்கீழ்ச் சிற்றரசராய்க் காஞ்சிமண்டலத்தையும் அதனைச் சூழ்ந்த நாட்டையும் ஆண்டு வந்தார்கள். கலிங்கத்துப்பரணியிற் சிறப்பிக்கப்பட்ட கருணாகரத் தொண்டைமான் என்பவன் இத்தன்மையையுடைய சிற்றரசர்களில் ஒருவன்; தஞ்சாவூரில் சாமந்தநாராயண விண்ணகர் என்று ஒரு விஷ்ணு கோயில் எடுப்பித்துச் சாமந்தநாராயணச் சதுர்வேதி மங்கலமென்று ஒரு கிராமம் உண்டாக்கி அந்தக் கிராமத்தில், வியாக்கியாதாக்களாயிருந்த சதுர்வேதிப்பட்டர்கள் நூற்றுறுபேருக்கு விருத்திகளை நியமித்தானென்று தஞ்சாவூர்ப் பெரியகோயிற் கல்வெட்டுக்களுள் ஒன்றிற் கூறப்பட்டுள்ள சாமந்தநாராயணத் தொண்டைமான் என்பவன் மற்றொருவன். சேக்கிழார் நாயனார் சகோதரருக்கு அநபாயச் சோழமகாராஜன் தொண்டைமான் என்னும் பட்டப்பெயர் கொடுத்ததாகச் சேக்கிழார் நாயனார் சரித்திரத்தால் தெரியவருகிறது. தொண்டைநாடு என்பது முற்காலத்தில் பல்லவர்கள் அரசாட்சிசெய்த நாட்டின் பெயர்; இந்நாட்டுக்கு ஜயங்கொண்ட சோழமண்டலமென்று மற்றொருபெயருண்டு. (ராவ்பகதூர் வி. வேங்கையரவர்கள் எழுதியது.)

†திண்டுக்கல்லுக்குத் தென்மேற்கே 20-மைலில் தான்றிக்குடியென்று ஒரு மலையும், மேற்கே 14-மைலில் தோணிமலையென்று ஒரு மலையும், கருவூர்க்கு மேற்கே மூன்று மைலில் தான்தோன்றிமலையென்று ஒரு மலையும் உண்டு.

*இவன் மலைபடுகடாமென்ற பாட்டிற் சிறப்பிக்கப்பட்டவன்; இவன் ஆண்ட பல்குன்றக்கோட்டமென்ற நாடு வடஆர்க்காடு தென்னார்க்காடு ஜில்லாக்களில் அடங்கியிருக்கின்றது. (ராவ்பகதூர் வி. வேங்கையரவர்கள் எழுதியது.)

* இம்மலை போதல என்றும் போதகை என்றும் பூர்வகாலத்திற் கூறப்பட்டுள்ளது. அவலோகிதேசுவரன் என்ற பௌத்தமுனி இம்மலையின்மீது இருந்ததாகச் சொல்வதுண்டு (ராவ்பகதூர் வி. வேங்கையரவர்கள் எழுதியது.)

*இக்கூற்றம் தஞ்சாவூர்ப் பெரியகோயிற் கல்வெட்டு ஒன்றிலும் திருப்பூவணத்துத் தாம்பிரப்பட்டயத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது. திருப்பெருந்துறை, துஞ்சலூர், தண்டலை என்ற ஊர்கள் இக்கூற்றத்தைச் சேர்ந்தவை (ராவ்பகதூர் வி. வெங்கையரவர்கள் எழுதியது.)

*இது திருப்பூவணத்துத் தாம்பிரப்பட்டயத்தில் அடிக்கடி கூறப்பட்டுள்ளது. கயலூர் என்ற ஊர் இதைச் சேர்ந்தது. (ராவ்பகதூர் வி. வெங்கையாவர்கள் எழுதியது.)

*வெண்ணிக்கூற்றமென்பது அடிக்கடி தஞ்சாவூராக கல்வெட்டுக்

களிற் சொல்லப்படுகின்றது; பெருநங்கைமங்கலம், பூவனூர் என்ற ஊர்
கள் இக்கூற்றத்தைச் சேர்ந்தவை (ராவ்பகதூர் வி. வேங்கையரவர்கள்
எழுதியது.)

———:o:———

## இந்நூலிலுள்ள சிறந்த பாடல்களையும் சிறந்த பாடற்பகுதிகளையும் காட்டும் எண்கள் வருமாறு:—

(௧)
(௨) ௧ - ௮; ௧௭ - ௨௦
(௩) ௧௪; ௨௪ - ௬
(௫) ௫ - ௮
(௬)
(௮) ௪ - ௧௦
(௯) ௧ - ௬
(௧௦)
(௧௨) ௩ - ௫
(௧௮) ௧௩ ௩௦
(௨௦) ௭ - ௨௦
(௨௨) ௩௧ - ௬
(௨௬) ௧௨ - ௫
(௨௭)
(௨௮) ௧ - ௬; ௧௫ - ௭
(௨௯) ௧௧ - ௨; ௨௩ - ௬
(௩௦) ௮ - ௧௦
(௩௧) ௧ - ௪; ௯
(௩௪) ௧ - ௭; ௧௯ - ௨௪
(௩௫) ௧௫ - ௬; ௨௫-௯;
௩௧ - ௪
(௩௬) ௧ - ௨
(௩௮) ௫ - ௧௮
(௩௯)
(௪௦) ௬ - ௧௧
(௪௧) ௧௨ - ௬
(௪௨ - ௩)
(௪௪) ௧௦ - ௧௬
(௪௫ - ௫௬)
(௫௭) ௧௦ - ௧௧
(௫௮)
(௫௯) ௩ - ௭
(௬௦) ௭ - ௯
(௬௨) ௧௩ - ௫
(௬௪) ௬ - ௭
(௬௫) ௯ - ௧௨
(௬௭) ௧௧ - ௪
(௬௮) ௧ - ௪; ௧௧ - ௩
(௬௯) ௫ - ௬
(௭௦) ௬ - ௭
(௭௧ - ௪)
(௮௪) ௧ - ௨
(௮௭)
(௮௯) ௫ - ௯
(௯௦ - ௯௫)
(௧௦௧)
(௧௦௬ - ௭)
(௧௦௯ - ௧௦)
(௧௧௨)
(௧௧௯) ௫ - ௭
(௧௨௧ - ௪)
(௧௨௫) ௭ - ௮
(௧௨௭) ௭ - ௧௦
(௧௨௮) ௫ - ௭
(௧௩௦ - ௩௪)
(௧௩௬) ௨௦ - ௨௨
(௧௩௯) ௫ - ௧௫
(௧௪௦)
(௧௪௧) ௧௦ - ௧௫
(௧௪௨)
(௧௪௮ - ௫௦)
(௧௫௧) ௧௦ - ௧௨
(௧௫௨) ௧ - ௬
(௧௫௩) ௭ - ௧௨
(௧௫௫) ௪ - ௯
(௧௫௬ - ௬௪)
(௧௬௫) ௧௦ - ௧௨
(௧௬௭)
(௧௭௦) ௧௪ - ௭
(௧௭௧ - ௩)
(௧௭௫)
(௧௭௭) ௧௫ - ௭
(௧௮௦ - ௯௭)
(௧௯௯)
(௨௦௩ - ௭)
(௨௦௮) ௬ - ௯
(௨௧௪)
(௨௧௫) ௮ - ௯
(௨௧௮)
(௨௨௦ - ௨௨௭)
(௨௩௦) ௧௦ - ௧௬
(௨௩௪ - ௫)
(௨௩௭)
(௨௩௯)
(௨௪௨ - ௩)
(௨௫௧ - ௨)
(௨௬௧)
(௨௭௫ - ௬)
(௨௭௮ - ௯)
(௨௯௪) ௩ - ௪
(௨௯௬)
(௩௧௨)
(௩௨௦) ௧ - ௨
(௩௨௪) ௧௩ - ௪
(௩௨௯) ௫ - ௯
(௩௩௭) ௬ - ௭
(௩௫௬)
(௩௬௭) ௪ - ௫
(௩௭௫) ௧௭ - ௨௧
(௩௭௬) ௧௫
(௩௮௧) ௨௩ - ௭
(௩௮௬) ௨௦ - ௨௫
(௩௮௭) ௧௯ - ௨௭
(௩௯௦) ௪ - ௬
(௩௯௪)
(௩௯௫) ௨௯ - ௩௧
(௩௯௭) ௧௨ - ௮
(௪௦௦) ௧௬ - ௭

PRINTED AT THE MADRAS LAW JOURNAL PRESS, MYLAPORE, MADRAS.